# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

விச்வம் தர்ப்பணத்ருச்யமான நகரீதுல்யம் நிஜாந்தர்கதம்
பச்யன்னாத்மணி மாயாயா பஹிரிவோத்பூதம்யதா நித்ரயா
ய: ஸாக்ஷாத்குருதே ப்ரபோதஸமயே ஸ்வாத்மானமே வாத்வயம்
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தயே 1

கண்ணாடியில் தோன்றுகின்ற நகரத்திற்கு நிகரான, தன் உள்ளே உள்ள உலகத்தை எவ்விதம் உறக்கத்தில் (உள்ளே உள்ள உலகம் வெளியில் தோன்றுவதுபோல காணப்படுகிறதோ அவ்விதம்) யார் தன்னிடத்தில் மாயையால் வெளியே உண்டானது போல் பார்த்துக் கொண்டு ஞானம் வந்தபின் இரண்டற்ற தன் ஆத்மசொரூபத்தை மட்டும் அறிகிறாரோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

பீஜஸ்யாந்தரிவாங்குரோ ஜகதிதம் ப்ராங்நிர்விகல்பம் புன:
மாயாகல்பிததேசகாலகலனா வைசித்ர்யசித்ரீக்ருதம்
மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹாயோகீவ ய: ஸ்வேச்சயா
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நமஇதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தயே 2

விதையில் உள்ள முளைபோல் இந்த உலகம் படைப்பிற்கு முன் வேற்றுமையற்றதாக இருந்து பின் மாயையால் கல்பிக்கப்பட்ட இடம், காலம் முதலியவற்றின் சேர்க்கையால் ஏற்பட்ட வேற்றுமையால் பல வகைப்பட்டதாக செய்யப்பட்டது. (இப்படியான உலகை) யார் மாயாவி-யைப்போலவும் பெரிய யோகியைப்போலவும் தன் ஸங்கல்பத்தினால் படைத்தாரோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மகமஸத்கல்பார்த்தகம் பாஸதே
ஸாக்ஷாத்தத்வமஸீதி வேதவசஸா யோ போதயத்யாச்ரி தான்
யத்ஸாஷாத்கரணாத் பவேன்னபுன ராவ்ருத்திர்பவாம் போநிதௌ
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தயே 3



எந்த ஆத்மாவின் ப்ரகாசம் இல்லாத பொருளுக்கு நிகரான உலகத்தில் ஸத்ரூபமாக (= ஸத் ஸத் என்று) விளங்குகிறதோ, எவர் தன்னை அண்டியவர்களை தத்த்வமஸி (= நீ அதுவாக இருக்கிறாய்) என்ற வேத வாக்யத்தால் நேரடியாக உபதேசிக்கிறாரோ, எந்த தத்துவத்தை அறிவதால் துயரக்கடலிலிருந்து மீண்டும் திரும்புதல் இல்லையோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

நாநாச்சித்ரகடோதரஸ்திதமஹா தீபப்ரபாபாஸ்வரம்
ஞானம் யஸ்யது சக்ஷுராதிகரணத்வாரா பஹிஸ்பந்ததே
ஜானாமீதி தமேவ பாந்தமனுபாத்யேதத் ஸமஸ்தம் ஜகத்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தயே 4

பல த்வாரங்களைக்கொண்ட பானைக்குள் வைக்கப்பட்ட பெரிய தீபத்தின் ஒளிபோன்று எந்த ஆத்மாவினுடைய ஞானமானது கண் முதலிய புலன்களின் வழியாக வெளியே செல்கிறதோ அந்தத் தானாக விளங்குகின்ற (ஆத்ம தத்துவத்தை) தொடர்ந்து இந்த முழு உலகமும் நான் அறிகிறேன் என்று அறிகிறதோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

தேஹம் ப்ராணமபீந்த்தியாண்யபி சலாம் புத்திம்ச சூன்யம் விது:
ஸ்த்ரீ பாலாந்த ஜடோபமாஸ்த்வஹமிதி ப்ராந்தா ப்ருசம் வாதின:
மாயாசக்தி விலாசகல்பிதமஹாவ்யாமோஹ ஸம் ஹாரிணே
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தயே 5

பெண்கள், குழந்தைகள், குருடர்கள், மூடர்கள், இவர்களுக்கு நிகரான மிகவும் குழப்பம் அடைந்த வாதம் புரிபவர்கள், உடலையும் ப்ராணனையும் இந்திரியங்களையும், சலனமான புத்தியையும், சூன்யத்தையும் நான் என்று (= ஆத்மா என்று) அறிந்து கொண்டிருக்கிறார்கள். மாயாசக்தியால் தோற்றுவிக்கப்பட்ட இந்த பெரிய மயக்கத்தை அடியோடு அழிக்கின்ற அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

ராஹுக்ரஸ்த திவாகரேந்து ஸத்ருசோ மாயாஸமாச் சாதனாத்
ஸன்மாத்ர: கரணோபஸம்ஹரணதோ யோ பூத் ஸுஷுப்த புமான்
ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோதஸமயே ய:ப்ரத்யபி ஞாயதே
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே 6

மாயையால் மறைக்கப்பட்டதனால் எந்த புருஷனானவர் ராஹுவால் மறைக்கப்பட்ட சூரிய சந்திரனை போன்றவராகவும் கரணங்கள் அடங்கியதால் உறக்க நிலையில் ஸத்சொரூபமாக மட்டும் இருக்கிறாரோ, எவர் விழிப்பு நிலையில் முன் நான் சுகமாக தூங்கினேன் என்று ஞாபகப் படுத்திக் கொண்டு இருந்து வருகிறாரோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா ஸர்வவாஸ்வவஸ்தாஸ்வபி
வ்யாவ்ருத்ததாஸ்வனுவர்த்தமான மஹமித்யந்த: ஸ்புரந்தம் ஸதா
ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம்யோ முத்ரயா பத்ரயா
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே 7

மாறிமாறி வருகின்ற இளமைப்பருவம் முதலியவைகளிலும் அவ்விதமே விழிப்பு முதலிய எல்லா அவஸ்தைகளிலும் தொடர்ந்து வருகின்றதும், உள்ளே எப்பொழுதும் நான் என்று விளங்கி வருகின்றதான தனது ஆத்ம தத்துவத்தை சிஷ்யர்களுக்கு எவர் மங்களமான சின் முத்திரையினால் வெளிப்படுத்திக் காட்டினாரோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

விச்வம் பச்யதி கார்யகாரணதயா ஸ்வஸ்வாமி ஸம் பந்தத:
சிஷ்யாசார்யதயா ததைவ பித்ருபுத்ராத்யாத்மனா பேதத:
ஸ்வப்னே ஜாக்ரதி வாயஏஷபுருஷோ மாயாபரிப்ராமித:
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே 8

எந்த இந்த புருஷனானவர் மாயாவால் மோகத்தை அடைந்தவராக கனவு நிலையிலும், விழிப்பு நிலையிலும் கார்ய காரண ஸம்பந்தம்



உடையதாகவும், உடைமை யஜமானன் என்ற ஸம்பந்தம் உடையதாகவும், சிஷ்யன் ஆசார்யன் என்ற ஸம்பந்தத்தை உடையதாகவும் அவ்விதமே தந்தை மகன் முதலிய ரூபமாகவும் உலகத்தை வேற்றுமையுடன் பார்க்கிறாரோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது)

பூரம்பாம்ஸ்யனலோ நிலோ ம்பரமஹர்நாதோ ஹிமாம்ஸு: புமான்
இத்யாபாதி சராசராத்மகமிதம் யஸ்யைவ மூர்த் யஷ்டகம்
நான்யத் கிஞ்சன வித்யதே விம்ருசதாம் யஸ்மாத் பரஸ்மாத் விபோ:
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே 9

அசைகின்ற அசையாத தன்மையுடைய இந்த உலகம் பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாசம், சூர்யன், சந்திரன், யஜமானன் என்று எந்த இறைவனுக்கு இவை மட்டும் உடலாக விளங்கி வருகிறதோ, உண்மையில் ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு எந்த வியாபகமான பரம்பொருளைக் காட்டிலும் வேறு ஒன்றும் இல்லையோ அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (சமர்ப்பிக்கப்படுகிறது).

ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமிதம் யஸ்மா தமுஷ்மிந்ஸ் தவே
தேனாஸ்ய ச்ரவணாத்ததர்த்தமனனாத் த்யானாச்ச ஸங்கீர்த்தனாத்
ஸர்வாத்மத்வமஹாவிபூதி ஸஹிதம் ஸ்யாதீச்வரத்வம் ஸ்வத:
ஸித்யேத் தத்புனரஷ்டதா பரிணதம் சைச்வர்யமவ்யாஹதம் 10

இவ்விதம் இந்த ஸ்தோத்திரத்தில் யாதொரு காரணத்தால் இந்த எல்லாமாக இருக்கும் தன்மை (= ஸர்வாத்மத்வம்) நன்கு விளக்கப்பட்டதோ, அதனால் இதை கேட்பதனாலும், இதிலுள்ள பொருளை சிந்திப்பதாலும், தியானிப்பதாலும், திரும்பத்திரும்பக் கூறுவதாலும் எல்லாமாக இருத்தல் என்ற உயர்ந்த மேன்மையுடன் கூடிய ஈச்வரத்தன்மை ஏற்படும். மேலும் எட்டுவிதமான அந்த அணிமா முதலிய ஐசுவர்யமும் தடையில்லாமல் தானாகவே கிடைக்கும்.

